# ‘அசோகன் காலத்தில்...’

[illegible] அ. மலையப்பன்





**வள்ளலார் நிலையம்**
புத்தகம் வெளியிடுவோர், விற்பனையாளர் கமிஷன் ஏஜெண்டுகள்
213, தங்கசாலைத் தெரு, சென்னை. 1

# ‘அசோகன் காலத்தில்......’






வெளியிட்டோர் :

**வள்ளலார் நிலையம்**

புத்தகம் வெளியிடுவோர், விற்பனையாளர்

அண்டு கமிஷன் ஏஜெண்டுகள்

213, தங்கசாலைத் தெரு, சென்னை 1.

# பதிப்புரை

தமிழ் நாட்டிற்கு இச் சிறிய சுவடியை எமது வள்ளலார் நிலைய முதல் நூலாக அறிமுகப்படுத்து கிறோம். தமிழ் நாட்டின் தலைநக ராகிய மதுரையில் இருக்கும் திரு முருகன் நிலையத்தின் அமைச்ச ராய் இருந்து தமிழ் நாடு உயரவும் தமிழ்மொழி ஆக்கம்பெறவும், தமி ழர் வீறு பெற்று உயர் நிலையில் வாழவும் உழைத்துவரும் அறிஞர் திரு. ஏரல். அ. மலையப்பன் அவர் கள் இந் நூலை வரைந்து எம்மை வெளியிடும்படி பணித்தார்கள்.

தமிழர் வாழ்வுக்கு இன்றி யமையாத நூலாகிய இந்நூலை எமது நிலையமும் வெளியிட சம்ம தித்தது. இதற்கு முன்னுரை வழங்கிய அறிஞர் வல்லை. பால சுப்பிரமணியம், பி. ஏ., அவர்க ளுக்கு எமது நன்றி. தமிழர்க்குப் பயன்படவேண்டிய இந்நூலை தமி ழர் அனைவரும்வரவேற்று மேலும் மேலும் இந்நூலாசிரியர் சிந்த னைச் செல்வத்தை வளர்க்குமாறு வேண்டுகிறோம்.

திரு. ஆ. 1979 இங்ஙனம்

மாசிமீ வள்ளலார் நிலையம்

# வணக்கம்

தமிழராகிய நமக்கு பொதுமொழி (இந்துஸ்தானி) வேண்டாம் என்பர் சிலர். வேண்டும் என்பர் பலர். வேண்டாம் என்போர்களின் வேலை, தமிழகத்தை தனித்தியங்க ஆவன செய்வதே! வேண்டும் என்போர்கள் கவனிக்காத-கவனிக்கவேண்டிய கருத்தை, அவர்களுக்கு நினைவுப்படுத்துவதே, இச்சுவடியின் குறிக்கோள்.

வேண்டும். ஆனால் எப்படி இருக்கவேண்டும் என்பதைப்பற்றி வடநாட்டில் எப்படி வாதாடுகிறார்கள் என்பதையும், இதில் நம்கடமை என்ன ? உரிமை என்ன ? என்பதையும் அறிவதற்கு துணையாய்இருக்கும் இந்த நூல்.

முதன்முதல் இதைப்பற்றிய கட்டுரை, திரு. மு. கணபதி அவர்கள் ஆசிரியராக இருக்கும்பொழுது "புது உலகம்" என்ற இதழிலும், பிறகு தாய் நாடு என்ற இதழிலும் வெளி வந்தது. இதைப் பார்த்த அன்பர்களில் சிலர், விரிவாக எழுதச் சொன்னார்கள். எழுதினேன். எழுதினால் போதுமா ? வெளியிட வேண்டாமா ?

இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு திரு சிறுவை மோகன சுந்தரம் அவர்கள் வள்ளலார் நிலையம் மூலம் குறித்த காலத்தில் சிரமம் பாராமல் வெளியிட்டு உதவினதற்கு நமது மனப்பூர்வமான நன்றி. வணக்கம்.

இதற்கு முகவுரைஎழுதியுள்ள திரு வல்லை-பாலசுப்பிரமணியம் அவர்களுக்கும்; நமது வெளியிடுகளுக்கு விளம்பரங்களைக் கொடுத்து உதவிய அன்பர்கள் திரு டி. எம். முத்து அவர்களுக்கும் முத்தமிழ் நிலயத்தாருக்கும் நன்றி. வணக்கம்.

மேலும் இதைப்பற்றி எழும் ஐயப்பாடுகளுக்கு விளக்கம், திரு. மு. கணபதி அவர்களால் மதுரையிலிருந்து வெளியிடப்படும் "சுதந்தரத் தமிழன்" மூலம் எதிர்பாருங்கள். அதனால் என்ன ? இதனால் என்ன ? என்று மாத்திரம் சும்மா இருந்துவிடாதீர்கள். வணக்கம்.

அன்பன்

72, வசந்த நகர்  
பசுமலை, எஸ். ஐ. ஆர்,

ஏரல். அ. மலையப்பன்,  
தி. பி. 20-2-1979

# எங்கள் பங்கு கொடுத்தாக வேண்டும்

நல்லதோ கெட்டதோ—இவைகளில் எதுவாகிலும் சரி, கொஞ்சகாலம் மாத்திரம் நீடித்திருந்துவிட்டால், மக்கள் அதற்குப் பழக்கப்பட்டுப் போகிருர்கள். அப்போது அவர்களுக்குக் கெட்டதுகூட கெட்டதாகத் தோன்ருமல், நல்லதாகவே தோன்றும். இது உலக இயல்பும் மக்களியல்பும் ஆகும். ஆனல், ஒரு நிலையிலிருந்து வேருெரு நிலைக்கு மாறுபாடு நிகழுங்கால்-கெட்டதிலிருந்து நல்லதுக்கு வரும் நிலையைக் கூடத்தான் சொல்கிறேன்-மக்கள் அதைச் சமாளித்துக்கொள்ள மிக்க இடர்ப்படுகிருர்கள். இவ் வுண்மைக்குச் சான்றுகள் காட்டுவதற்கு வெகுதூரம் போகவேண்டாம். தற்காலத்திய தமிழ் நாடே அதற்குப் போதிய சான்ருகும்.

அண்மையில் முடிவு பெற்ற இரண்டாவது உலகப் பெரும்போர் சுமார் ஐந்தாண்டுகள் கோர தாண்டவம் ஆடிய தென்பதை அன்பர்களுக்கு ஞாகப்படுத்த வேண்டியதில்லை. 'அது ஒரு தவிர்க்க முடியாத தீமை' என்று சொல்லிக்கொண்டு உலக மக்கள் அதற்குத் தங்களைப் பழக்கப்படுத்திக் கொண்டார்கள். ஜப்பானியத் தீவு ஒன்றில் விசப்பட்ட அணு குண்டினல் அந்தப் போர் சடுதியில் நின்றது என்பது நினைவிருக்கலாம். ஆனல், அப்படி நின்ற அந்தப் போர் மற்ருெரு அணுகுண்டினை உலகத்தின்மீது விசியது. அது வேருென்றுமில்லை. சமாதானம் என்னும் அணுகுண்டேயாகும். இப்படி நான் சொல்வது அன்பர்களுக்கு வியப்பாக இருக்கலாம். "யுத்தத்தை ஒருவாறு சமாளித்துவிட்டோம். எதிர் பாராமல் வந்த இந்த சமாதான நிலைமையை எவ்வாறு

சமாளிக்கப் போகிறோம்"! என்று அக் காலத்தில் ஆட்சியாளர்கள் கவலைப்பட்டதை செய்தித்தாள்களில் படித்த அன்பர்களுக்கு வியப்பு ஒன்றும் நிகழாது. ஏன், இன்னும் அந்தக் கவலை ஆட்சியாளர்களைவிட்டு நீங்கின பாடில்லையே!

உலகத்திலுள்ள ஏனைய நாடுகளுக்கு ஒரு மாற்றம் என்றால், நம் இந்திய நாட்டுக்கு இரண்டு மாற்றங்கள்: (1) யுத்தத்தை அடுத்து வந்திருக்கும் சமாதானப் பிரசினைகள்; (2) அரசியல் உரிமை கிடைத்ததனால் உண்டான வேறுபட்ட நிலைமை.

மேற்காட்டிய உலக இயல்புக்கும் மக்கள் இயல்புக்கும் தமிழ் நாடு விதி விலக்கல்ல. தமிழ் நாட்டுத் தலைவர்களையும் மக்களையும் இப்போது அலைக் கழிக்கும் எண்ணிறந்த பிரசினைகளில் மிக முக்கியமானவை பின்வரும் மூன்றுகும்:—(1) இந்திய அரசியலமைப்பில் தமிழ் நாட்டின் நிலை என்ன? (2) தமிழரசு தனித்தியங்குவதாயிருந்தாலும் சரி இந்தியக் கூட்டு அரசியலில் ஓர் அங்கமாயிருந்தாலும் சரி, தமிழ் நாட்டின் எல்லைகள் யாவை? (3) பொதுமொழி பற்றிய போராட்டத்தில் தமிழ் மொழியின் நிலை என்ன?

மேற்சொன்ன மூன்று பிரசினைகளில் முதலிரண்டைப் பற்றி தமிழரசுக் கழகம், தமிழர் கழகம், திராவிடர் கழகம் ஆகிய இவை கருத்து வேறுபாடு கொண்டிருந்த போதிலும் தமிழ் மொழியைப் பற்றிய வரையில் இம் மூன்று கழகங்களும் ஒரே கருத்துடையனவாயிருப்பது சிந்திக்கற்பாலது. அதாவது, இந்தியப் பொது மொழி எதுவாயிருந்தபோதிலும் அது தமிழின் வளர்ச்சிக்கு ஊறு செய்யக்கூடாதென்பதேயாகும்.

தற்போதைய உலகப்போக்கு சிறு சிறு நாடுகள் தனித்தியங்குவதற்குத் துணைசெய்வதாயில்லை. அது போலவே, இந்தியாபோன்ற ஒருதுணைக்கண்டத்திலுள்ள ஒரு மக்கட் பகுதியினர் "எங்களுக்குப் பொது மொழி யென ஒன்று வேண்டியதில்லை; எங்கள் மொழியைக் கொண்டே நாங்கள் கடைத்தேறி விடுவோம்" என்று சொல்வது பொருந்தாது. கால வேகமும் உலகப்போக்கும் இதற்குத் துணை செய்யா. வேண்டுமானால் இம் மக்கட் பகுதியினர் தங்கள் மொழியையே பொதுமொழி யாக்க எல்லாவிதமான முயற்சியும் செய்யட்டும். எப்படி யாயினும் இவர்கள் ஒரு பொதுமொழிக்குட்பட்டே யாக வேண்டும். இன்றேல் இவர்கள் கிணற்றுத் தவளைக ளாய் விடுவார்கள். இது வரலாற்று நூல் கூறும் உண்மையாகும்.

"இந்தியாவிலேயுங்கூட பிறநாட்டுத் தொடர்பில்லா மல் தனித் தமிழரசினை ஏற்படுத்துவோம்" என்று வீராப்புப் பேசலாம். நூற்றுக்கு ஒரு பங்கு இந்த எண் ணத்தைச் சாதித்துக் கொண்டாலும் கொள்ளலாம். ஆனால் அப்படிக் கிடைத்த தனித் தமிழரசினை எத்தனை நாள் கட்டிப்பிடிக்க முடியும், என்பது சந்தேகத்துக்கிட மானதுதான். 1937—38-ம் ஆண்டுகளில் தமிழ் நாட் டிலே இந்தி எதிர்ப்புப் போர் பெருந்தீயென மூண்டெழுந் தது. அதில் தமிழர் ஒருவகையில் வெற்றி பெற்றூர் என்றும் சொல்ல வேண்டும். அஞ்ஞான்று தமிழர் களிடையே உண்டான உணர்ச்சியும், கிளர்ச்சியும் தான் இன்னமும் குன்றுமல் இருந்து வருகின்றன. ஆனல், இந்தியப் பொதுமொழிக்குத் தமிழர் உட்படாமல் இருக்க முடியுமா?

இப்படியெல்லாம் சிந்தனை செய்யும்போதுதான் உண்மைத் தமிழன் ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும்

ஒருவிதமான கவலையும் தளர்ச்சியும் தோன்றுகின்றன. "ஆஹா, தமிழை வைத்து உலகாண்ட காலம் எங்கே? இப்போது இந்தியாவின் தென்கிழ் முனையில் ஒரு பொது ஆட்சிக்குட்பட்டு, ஒரு பொது மொழிக்கு வணக்கஞ் செலுத்தவேண்டிய காலம் எங்கே? அப்படியானால் நமது தனித் தமிழரசும் தமிழ் மொழியும் என்னவது? அப்படி அந்தக் கூட்டுஅரசியலும் பொதுமொழியும் தவிர்க்கமுடியாதனவாயிருந்தால், அவைகளில் தமிழர்கள் தங்கள் சுயமரியாதைக்குப் பங்கம் உண்டாகாமல் பங்கெடுத்துக் கொள்ள ஏதாகிலும் வழி இருக்கிறதா? இருக்கக் கூடாதா?" என்று உண்மைத் தமிழன் கவல்கின்றான்.

இப்படி உறுங்கவல் ஒன்று உற்றுழி கைகொடுப்பது, நண்பர் திரு. ஏரல். அ. மலையப்பன் அவர்கள் எழுதிய "அசோகன் காலத்தில்......" என்னும் இந்நூலேயாகும். "நிச்சயமாக வழி இருக்கிறது" என்று நமக்கு ஆறுதல் கூறுகிறார் நண்பர் மலையப்பன்.

அளவைப் பொறுத்தவரையில் இந் நூல் மிகச் சிறியதேயாயினும்—ஏன், இதை ஒரு நீண்ட கட்டுரை என்று சொல்லலாம், அவ்வளவுதான்—கருத்தில் மிக உயர்ந்தது. இவ்வகையில் மலையப்பனை நான் மனமாரப் பாராட்டுகிறேன். உங்களையும் பாராட்டச் சொல்கிறேன்.

பழமை வேண்டாமென்று பிதற்றும் புல்லறிவாளர்கட்குப் பளிரென்று சாட்டை கொடுத்துக்கொண்டே நண்பர் இந் நூலைத் தொடங்குகிறார். ஒரு நாட்டின் "மாண்ட வழிச் செலவின்" இன்றியமையாமையை வற்புறுத்துகிறார். இந்தியாவின் மூவ்நிறக் கொடியில் விளங்கும் அசோக சக்கரத்துக்கும், தமிழர்களுக்கும் ஒரு வியப்பான தொடர்பைக் காட்டுகிறார். அசோகப் பேரரசர் காலத்தில் வழங்கி வந்த பிராமி மொழிக்கும் தமிழுக்கும்

உள்ள நெருங்கிய ஒற்றுமையே அத்தொடர்பாகும். வடநாட்டிலேகூட ஆரியத் தொடர்பு அதிகமாயுள்ள தனி இந்திக்கும் பொதுவான இந்துஸ்தானிக்கும் அண்மையில் நடந்த போராட்டத்தைத் தத்ரூபமாகச் சித்திரித்துக் காட்டுகிறார்.

ஒரு நாட்டின் ஆட்சி மன்றம் அந்நாட்டு மக்கள்மேல் வரிபோடுவதாயிருந்தால், அந்த மன்றத்தில் அந்நாட்டு மக்கள் பிரதிநிதித்துவம் கேட்பது நியாயமேயல்லவா? "பிரதிநிதித்துவம் கொடுக்கமாட்டாயா? வரியும் கொடுக்கமாட்டோம் No representation ; no taxation" என்னும் கருத்தை அடிப்படையாக வைத்துத்தானே இங்கிலாந்தில் மன்னர்களுக்கும் பாராளுமன்றத்துக்கும் பல நூற்றாண்டுகளாகப் போர் நிகழ்ந்தது. இதே விவாத வழியைப் பின்பற்றி மலையப்பன் வாதிக்கிறார்: இந்திய அரசியலாளரே! ஆரியத்தின் தொடர்பு மிக்க தனி இந்தியை இந்தியாவின் பொதுமொழியாகச் சுமத்த முயன்றீர்கள். இதற்கு வடநாட்டிலேயே மிக்க எதிர்ப்பு இருந்தது. ஆகவே, தனி இந்தி மோகத்தை விட்டு, அராபியத் தொடர்புடைய உருதுவிலிருந்து பல சொற்களைச் சேர்த்துக்கொண்டு, இந்துஸ்தானியாக்கி, அதுதான் பொதுமொழி என்று இப்போது சொல்கிறீர்கள். அதே வாதத்தை அனுசரித்து நாங்கள் சொல்வதையும் கேளுங்கள். உங்களுடைய தனி இந்திக்கோ கலப்பு இந்துஸ்தானிக்கோ எங்கள் அருமைத் தனித் தமிழ் கொஞ்சங்கூடத் தொடர்புடையதன்று. எங்கள் மொழி வேறுபட்ட ஓரினத்தைச் சேர்ந்தது. அது முற்றும் தனித்தியங்க வல்லது. இருந்தபோதிலும், ஏதோ அரசியல் காரணங்களுக்காக, உங்கள் இந்துஸ்தானியைப் பொதுமொழியாக ஒப்புக்கொள்ளத் தயாராயிருக்கிறோம்.

ஆனால், ஒரு நிபந்தனையின் பேரில்தான். நீங்கள் இது காறும் எங்கள் உயிரினும் சிறந்த தமிழ் மொழியை உதாசீனம் செய்து வந்தீர்கள். அதுமட்டும் அல்ல. அவமதித்தும் வந்தீர்கள். எங்கள் சிறப்பெழுத்துக்களாகிய ழகரத்தையும் றகரத்தையும் சூத்திர எழுத்துக்கள் என்று ஏசினீர்கள். போனது போகட்டும். அந்த ழகரத்தையும், றகரத்தையும் இந்துஸ்தானி நெடுங்கணக்கில் சேர்த்துக் கொள்ளவேண்டும். உங்கள் பொது மொழியிலே நூற்றில் முப்பதுக்குக் குறையாத சொற்கள் தமிழ்ச் சொற்க ளாயிருக்க வேண்டும். அப்போதுதான் இந்துஸ்தானி எங்களுக்கும் பொது மொழியாகும்.''

நண்பர்களே, மலையப்பனுடைய மாற்றத்தைப் பார்த்தீர்களா! அவருடைய ஆலோசனையை நீங்கள் முற்றும் ஒப்புக் கொள்வீர்களோ மாட்டீர்களோ, எனக்குத் தெரியாது. ஆனால், அது மிக்க துணிச்சலானது என்பதில் சந்தேகமேயில்லை. அதை ஒப்புக் கொள்வதனால் தமிழர்களுக்கு மதிப்புக் குறைவு ஒன்றும் நேரிட்டுவிடாது. அதற்காக மலையப்பன் நமது பாராட்டுதலுக்கு உரியவராவர்.

மலையப்பனுடைய உரைநடையைப்பற்றி ஒரு சொல். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், உயிரியங்கு உரைநடை என்று அதைச் சொல்லலாம். அதன் ஒவ்வொரு சொல்லிலும் தமிழார்வத்தையும் துடிப்பையும் காணலாம். எடுத்துக் காட்டாக, அவர் உரிமை கேட்கும் ஆவேசத்தைப் பாருங்கள்.

"எனவே உரிமை வேண்டும். பொது மொழியில் தமிழுக்காக உரிமை வேண்டும். தென்னாடும் இந்தியாவுடன் சேர்ந்திருப்பதனால் உரிமை வேண்டும். தென் மொழி நிலத்தில் இந்துஸ்

தாலியைப் புகுத்துவதனால் உரிமை வேண்டும், வேண்டும், இவ் வுரிமை, விரைவாக வேண்டும்.''

*  *  *  *  *

தமிழ் மக்கள் திருவள்ளுவர் ஆண்டிலைக் கடைப் பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்திப் பல கட்டுரைகளும் சிறு நூல்களும் எழுதியதனால், ஏரல் மலையப்பனுடைய புகழ் தமிழ் நாடெங்கணும் ஏற்கெனவே பரவியிருக்கிறது. "அசோகன் காலத்தில்......'' என்னும் இந்நூல் அந்தப் புகழ் மாளிகைக்கு மற்றொரு தூணாகும் என்பதில் சந்தேக மில்லை.

இது காலத்துக்கேற்ற ஒரு நூல்!

மலையப்பனுக்கும் உங்களுக்கும் இடையில் இன்னும் தடையாக நிற்கும் எண்ணம் எனக்கில்லை. இனி அவரே உங்களோடு நேரில் பேசுவார்.

"பொன்னரங்கம்''
பெத்து நாய்க்கன்பேட்டை
சென்னை.
திரு. ஆ. 1979, மாசிமீ

வல்லை - பாலசுப்பிரமணியம்.

# ‘அசோகன் காலத்தில்......’

இன்றைய மூவிற தேசியக் கொடியில் இருக்கிற சக்கரத்திற்கு விளக்கம் பலர் பலவிதமாக சொல்லுகின்றனர். யார் எப்படி சொன்னாலும் எல்லோரும் அசோகச்சக்கரம் என்பதை நினைவுப்படுத்தாமல் இருப்பதில்லை. ஏன்?

ஒரு நாட்டை காப்பது படை. நாட்டை ஆளுவோனுக்கு படைதான் முதன்மையான செல்வம் என்பதை “உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன் வெறுக்கையுள் எல்லாந் தலை” என்ற குறள் அறிவுறுத்துகிறது. எது படை என்பதை விளக்கும்பொழுது “கூற்று உடன்று மேல்வரினும் கூடி எதிர் நிற்கும் ஆற்றல் அதுவே படை” என்கிறார் வள்ளுவர்.

படைக்கு இந்த வல்லமை எப்படிவரும் என்பதற்கு “மறம், மானம் மாண்ட வழிச் செலவு தேற்றம் என நான்கே ஏமம் படைக்கு” என்கிறார் வள்ளுவர். அதாவது படைக்கு மறமும் மானமும் இருக்கவேண்டுவதோடு, அவசியம் பண்டைய வரலாற்றுச் சிறப்பு மிகமிகத் தேவை. ஏனெனில், ஏதோ ஒரு காரணத்தால் மறத்தையும் மானத்தையும் இழந்திடும்பொழுது பழமைச் சிறப்புதான் தளர்ச்சியான மனப்பான்மையை கிளர்ச்சியால் கிள்ளி எறிந்து வளர்ச்சி யடைய வகை சொல்லுகிறது.

வரலாறு இல்லாத நாட்டுக்கு வாழ்வில்லை. வரலாறு எப்படியோ வாழ்வு அப்படி என்று சொன்னால் மிகை

யாகாது. இதனால்தான் ஒவ்வொரு நாட்டாரும் தன் தன் நாட்டின் மாண்ட வழிச்செலவை—வரலாற்றுப் போக்கை கண் இமை போல காப்பாற்றி வருகிறார்கள். மறத்தை ஊட்டும் குறிகளை முன்னால் நிறுத்துகிறார்கள். அடிமை புத்தியை புகட்டுகளை சின்னங்களை அகற்றி விடுகிறார்கள்.

இம்மாதிரி மாண்ட வழிச் செலவை செம்மை செய்து முன்னால் வைத்ததும், மங்கிய மறமும் மானமும் மனதில் உண்டாகிவிடுகிறது. மனதில் உண்டாக — உண்டாக நாட்டை காப்பாற்றுவது நம் கடமை என்பதை உணர்ந்து விடுகிறார்கள்.

இந்த வகையில் நம் நாடும் தன் கடமையைச் செய்து வருகிறது. நம் நாட்டு வரலாற்றிலே முதல் இடம் பெற்றதில் அசோக அரசு ஒன்று. அன்பாலும் அறத்தாலும் ஆண்ட அரசு அது. அந்த அரசின் அடையாளக் குறியில் சக்கரம் முதன்மையானது. சிறப்பானது. இச் சக்கரத்தை இன்று, இந்திய அரசாங்கம் பண்டைய வரலாற்று நினைவுக்காக கொடியில் பதித்து பறக்கவிட்டிருக்கிறது.

இச் சக்கரம் இன்று, பழமைக்கு பழமையும்; புதுமைக்கு புதுமையும்; வரலாற்றுக்கு வரலாறும்; வாழ்வுக்கு வாழ்வும் விளக்கம் தருகிறது. இதனால் இப்புதிய அமைப்பின் கொடியை எல்லோரும் எதிர்ப்பின்றி ஏற்றனர்.

இச்சக்கரக் கொடியை தமிழ் இனத்தார் ஏற்கக் கூடியதா? எதிர்க்கக் கூடியதா? என்பதை ஆராய்ந்து ஏற்கக் கூடியது என்றும்; ஆனால் அது தமிழரின் தனியரசுக் கோரிக்கையை மறுத்தால் அதற்குப் புறம்பாக தமிழர்

மற்றொரு கொடியின்கீழ் போராட்டம் தொடங்குவதோ அதில் வெற்றி பெற்று தமிழகத்தில் தனியரசு காண்பதோ தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகளாகும் என்பதை சுட்டிக்காட்டியுள்ளார், நமது தமிழரசு கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்.

நாம் அறிந்த வரையில் தமிழரசுக் கழகம் பன்மையில் ஒருமை விரும்புகிறது. அதாவது பாரதியார் சொல்லி இருப்பதுபோல மொழிவாரி நாட்டை பிரித்து அரசுரிமை பெற்று, மேற்கண்ட தாயின் மணிக்கொடியின் கீழ் ஒன்றுபொன்று இணைந்து நிற்கும் ஒரு சமுதாயத்தை விரும்புகிறது. ஆனால் தமிழனின் நல் வாழ்வுக்காக பாடுபடுகிற கழகங்கள் இது போக இன்னும் இரண்டு இருக்கின்றன. அதில் ஒன்று திராவிடர் கழகம் மற்றொன்று தமிழர் கழகம்.

சற்று ஏறக்குறைய 5000 ஆண்டுகளுக்குமுன் இருந்த தமிழகத்தின் எல்லையாகிய விந்திய மலையை வட எல்லையாகக் கொண்டு, அதை-அக்காலத்தை அடிப்படையாக வைத்து, இருளே உலகத்தியற்கை இருள் அகற்றும் கை விளக்கே கற்ற அறிவுடமை என்ற பாடலுக்கு ஏற்ற முறையில், இருள் சூழ்ந்த ஒளி கொண்ட பகுத்தறிவுக் கொடியின்கீழ், தன்னைத் தானே மறந்து மறைந்து மாறுபட்டுப் போன ஓர் இன மக்களை ஒரே சமுதாயத்தில் கொண்டுவர விரும்புகிறது திராவிடர் கழகம்.

சென்றது போக, இன்று இருக்கிற தமிழகத்தை எல்லையாகக் கொண்டு பண்டைய அரசுக் கொடியின்கீழ் தனித் தமிழரசை விரும்புகிறது தமிழர் கழகம்.

இந்த இரண்டு கழகங்கள் எக்காரணத்தைக் கொண்டும் அசோகச் சக்கரம் கொண்ட மூநிறக் கொடியின் கீழ்

இருக்க விரும்பவே விரும்பாது. விரும்பவுமில்லை. தமிழரசுக் கழகம் ஒன்றுதான் மூவிறக் கொடியின்கீழ் இணைந்து நிற்கும். நிற்கிறது. ஆகையால் தமிழரசுக் கழகத்தாருக்கு தலை சிறந்த மறுக்கமுடியாத ஒரு கடமை இருக்கிறது. கொடியில் கவனம் செலுத்தியது போல அதிலும் கவனம் செலுத்தவேண்டும்.

தமிழரசுக் கொள்கைப்படி நமக்குத் தனி அரசுரிமை பெற்று மூவிறக் கொடியின்கீழ் நிற்கும்பொழுது பல இன மொழிகள் கொண்ட சமுதாயத்தில் இருக்க வேண்டியவர்களாகி விடுகிறோம். அரசுரிமை எவ்வளவு கிடைத்தாலும் நூற்றுக்கு நூறு கிடைக்காது. தொன்னூற்றி ஒன்பது வரையும் கிடைக்கலாம். மீதம் இருக்கிற இணைப்பால், எல்லா தேசிய இனங்களுக்கும் சேர்ந்ததொரு தாயின் மணிக்கொடி இருப்பதுபோல ஒரு பொது மொழி இருக்க நேரிடும். இருக்கவும் வேண்டும். ஏனென்றால் காஞ்சிபுரத்தானும் காசுமீரத்தானும்; மலையாளத்தானும் மராட்டியானும்; ஆந்திரக்காரனும் ஆசாமியக்காரனும்; பழந்தமிழனும் பட்டாணியனும் மூவிறக் கொடியின் கீழ் அணி வகுத்து நின்று எல்லா இனங்களும் ஒரே காலத்தில் எங்கள் நல்லுயிர் ஈந்தும் இக் கொடியினைக் காப்போம் என்று உறுதிமொழி கூறவாவது ஒரு பொது மொழி வேண்டும். கொடியை ஏற்கும் பொழுது அதற்குள்ள மொழியை மறுக்க முடியாது. உறுதிமொழிக்கு வந்த பொது மொழி உத்தியோகமொழியாக உறுதி பெறும். இது திண்ணம்.

வராது என்றும் வேண்டாம் என்றும் சொல்லலாம். வந்தால் தடுப்பேன் என்று மார்தட்டி பேசலாம். ஆனால் பல இனமொழிகள் கொண்ட சமுதாயக் கொடியின் கீழ் இருக்கவேண்டும் என்று சொல்லும் வரையில்—இருக்

கும் வரையில் அந்த பொது மொழி வந்துதான் திரும்-பேற்கத்தான் நேரிடும். இதை மறுக்கமுடியாது. தடுக்க முடியாது. கட்டாயம் இல்லாமலே அந்த பொது மொழி கொடியுடன் கலந்து கண்ணுக்குத் தெரியாமல் வந்து விடும் என்பது திண்ணம். முக்காலும் திண்ணம்.

எல்லா இனத்தவரின் உணர்ச்சிக்கும் எல்லா பண்பாடுகளுக்கும் பொருந்துவதாகவும்; மதிப்பு தருவதாகவும் தேசியக் கொடி இருக்கவேண்டுவதுபோல இருப்பது போல தேசிய மொழியும் இருக்கவேண்டும். இது ஒரு சிக்கலான பிரச்னை என்ருலுங்கூட சீர் செய்துதான் ஆக வேண்டும்.

தென் நாட்டில் பொது மொழியை பரப்புகிற—பரவ வேண்டும் என்கிற தமிழர்கள் முதலில் தன் வரலாற்றை —தன் தாய்மொழி வரலாற்றை தெரிந்துகொள்ளவேண்டும். ஏலெனில் பித்தளை எனத்தில் புளி சத்துள்ளதை வைத்தால் கெடுகிறது. இதனுல் நாம் ஒன்றை ஒன்றில் வைக்கும்பொழுது எனத்திற்கு ஏற்ற பொருள்தானு? பொருளுக்கு ஏற்ற எலந்தானு? என்று இரண்டையும் தனித்தனியாகவும் சேர்த்தும் கவனிப்பதுபோல நமது தாய் மொழிக்கு ஏற்ற பொது மொழியா? என்பதை எண்ணிப்பார்க்கவேண்டும்.

அந்தந்த மொழி அந்தந்த தாயகத்தில் இருக்கும் வரை நமக்கு ஒன்றும கவலை இல்லை. நமது தாயகத்தில் வேருெரு மொழியை புகுத்தும்பொழுதுதான் இதை யெல்லாம் எண்ணி பார்க்கவேண்டியதாய் இருக்கிறது. மேலும் பொது மொழி பொதுவாய் இருக்கவேண்டும். அதாவது கலப்புடையதாய் இருக்கவேண்டும். தனி மொழி அதனுடைய தாயகத்திலாவது பிறமொழி கலப்

யின்றி தனித்தியங்க வேண்டும். இதுதான் முறை. நியாயம். ஆனால் தமிழகத்திலும் தமிழை கலப்படமாக்குகிறார்கள். தமிழகத்திற்கு வருகிற அதுவும் பொதுவாக வருகிற மொழியில், இந்நாட்டு சொற்களை கலப்படமாக்காமல் தனித்தியங்கும்படி செய்கிறார்கள். இச்செய்கை நேர்மைக்கும் நியாயத்திற்கும் புறம்பானது.

முதலில் இந்தியன் என்று சொல்லும் தேசிய தமிழ் அன்பர்களே! நமது மொழி நமது இனம் இன்று நேற்று ஏற்பட்டது அல்ல. பன்னெடுங் காலத்திற்கு முந்தியது. இன்று இருக்கும் எல்லைக்குள் அன்று நாம் இருந்தவர்கள் அல்ல. நமது சென்ற காலத்தின் வரலாறு செல்லச் செல்ல நமது தாயகத்தின் எல்லையும் விரிவடைந்து பெருகுகிறது. சென்ற காலம் அண்மையில் நெருங்க—நெருங்க நமது தாயகத்தின் எல்லைக் கோடுகள் சுருங்குகிறது குறைகிறது.

இன்றைய தமிழகத்தின் எல்லை மேற்கே, தொடர்ச்சி மலை. கிழக்கே, கடல். வடக்கே, வேங்கடம். தெற்கே குமரி முனை. இதற்கு இடர்பாடு இன்று. எத்தனை தலைகளை காவு கொடுத்து எல்லையைக் காக்க நேரிடுமோ தெரியவில்லை. சேர நாடு சிறப்புடன் இருக்கிற காலத்தில் மேற்கு எல்லை, கடல். அதற்கு சில நூற்றாண்டுகளுக்குமுன் வடக்கு எல்லை, விந்தியமலை. அதற்கும் சில நூற்றாண்டுகளுக்கு முன் வடக்கு எல்லை, இமயம்.

இப்படிச் சொல்லுவது புகழ் உரை அல்ல, நிகழ் உரை. பொய் உரை அல்ல, மெய் உரை. மறைந்திருக்கிற பொருளை கண்டு அறிய தொலை நோக்கி கருவிகள் தேவை படுவதுபோல அழிந்த நமது தாயகத்தின் பரப்பை கண்டு அறிய ஆராய்ச்சிக் கண் தேவை. இக்

கண் தெளிவாக இருப்பவர்களுக்கு இதன் உண்மை தெளிவாக தெரியும்.

இம் மாதிரி விரிவில் இருந்து சுருங்கிக் கொண்டு வந்து கடைசியில் தென்கிழ் முனையில் பல்குழலும் பாழ் செய்யும் உட்பகையுடன் இருக்கிற அளவுக்கு நம் தாய கம் வந்தது ஏன் ?

நம் தாயகத்தின் உயிர் தமிழன். தமிழன் உயிர் தமிழ். தமிழின் உயிர் அதன் சொற்கள்—எழுத்துக்கள். இப்படியிருக்க தமிழில் தமிழ்ச்சொற்களை புறக்கணித்து விட்டு பிற சொற்களுக்கு தமிழில் இடம் கொடுத்தோம். முதலில் சொற்களை இழந்தோம். சொற்களால் எழுத் துக்களை இழந்தோம். எழுத்துக்களால் மொழியை இழந் தோம். தமிழ் மொழியால் தமிழ் மக்களை இழந்தோம். மக்களால் நாட்டை இழந்தோம். இதுதான் நேரான சரியான காரணம்.

இந்த உண்மையை உணர்ந்திருக்கிறோம். உணர்த் தியு மிருக்கிறோம். இருந்தாலும் விந்தியமலை வரையும் இருந்தவர்கள் தமிழர்கள்தான் என்பதை எடுத்துக் காட்டவேண்டிய வரலாற்றுச் சான்றுகளும் இதற்காக ஒரு கழகமும் இருக்கிறது. ஆனால் இதற்கு வடக்கேயும் இருந்தவர்கள் தமிழர்கள்தான் என்பதற்கு என்ன தக்க சான்றுகள் இருக்கின்றன என்று கேட்கலாம்.

இதற்குச் சிந்து வெளி நாகரிக வரலாறு இருப்பது ஒருபுறமிருக்க அசோகன் காலத்தில் இருந்த மொழி நமக்கு தக்க உறுதியான சான்றாக இருக்கிறது.

இன்று எத்தனையோ மொழிகள் நம் இந்தியா நாட் டில் இருக்கின்றன. இதில் அராபிய இனம் ஒரு வகை. ஆரிய இனம் மற்றொரு வகை. ஆனால் தமிழ் மொழி

தனிச் சிறப்புடையது. எல்லா மொழியிலும் க, ச, ட, த, ப. என்ற எழுத்துக்களுக்கு துணை எழுத்துக்கள் உண்டு. ஆனால் இவ்வெழுத்துக்கள் தமிழில் இல்லை. வந்துள்ள ஐ, ஸ, ஹ, க்ஷ போன்ற வடமொழி எழுத்துக்களையும் பாடச்சுவடியில் ஒதுக்கித்தான் வைத்திருக்கிறோம். நாம் மாத்திரமல்ல. வடமொழி எழுத்துக்களை ஒதுக்கித்தான் வைத்திருக்கிறார்கள், மலையாளிகள். மேலும் ழ என்ற எழுத்தும் ற என்ற எழுத்தும் வேறு மொழியில் இல் லாமல் தமிழில் சிறப்பாக இருக்கின்றன.

இம்மாதிரியான அமைப்பினால் தமிழ் மொழி இப் பொழுது இருக்கிற எந்த இந்தியமொழியுடனும் தொடர்பு இல்லை. தனிப் பெரும் செம்மொழியாக இருக்கிறது. ஆனால் அந்த அசோகன் காலத்தில் இருந்த மொழியுடன் கீழ்க்கண்டவாறு மிக மிக நெருங்கிய தொடர்புடன் இருக்கிறது.

தமிழில் க, ச, ட, த, ப. என்பதற்கு வர்க்க துணை எழுத்துக்கள் இல்லாதது போல அசோகன் காலத்தில் உள்ள மொழியிலும் இல்லை. தமிழுக்கு ஜ, ஷ, ஹ போன்ற எழுத்துக்கள் கிடையாததுபோல அந்த மொழி யிலும் கிடையாது.

தமிழில் ழ என்ற எழுத்தும் ற என்ற எழுத்தும் சிறப்பெழுத்துக்களாக இருப்பது போல அசோகன் காலத்தில் உள்ள மொழியிலும் இருக்கிறது. மேலும் ழ என்ற எழுத்தை கையெழுத்தால் எழுதும்பொழுது ஏற் படும் வடிவம் எப்படி இருக்குமோ அப்படியேஇருக்கிறது. பொதுவாக, தமிழ் மொழியின் பண்டைய எழுத்துக்க ளின் வரிவடிவமும் அசோகன் காலத்தில் உள்ள மொழி யின் வரிவடிவமும் ஒன்றாகவே இருக்கிறது.

எடுத்துக்காட்டாக:—மிகப் பண்டைய காலத்தில் அதாவது அசோகன் காலத்தில் க என்ற எழுத்தின் தமிழ் வரிவடிவம் சிலுவைக்குறி (†) போல இருக்கிறது. இதே மாதிரிதான் ஆந்த மொழியிலும் இருக்கிறது.

தமிழில் உள்ள தொல்காப்பியம் மிக மிகத் தொன்மை வாய்ந்தது. தனிச் சிறப்புடையது. இப்படிப்பட்ட இந்நூல் மேற்கண்ட வரிவடிவத்தில்தான் எழுதப்பட்டிருக்குமாம். இருமொழிக்கும் வரிவடிவத்தில் ஒற்றுமை பெயரில்தான் வேற்றுமை. ஆந்த மொழியின் பெயர் பிராமி. இந்த மொழியின் பெயர் தமிழ்.

இப்படியிருக்க வரலாற்றுச் சுவடியிலாவது அசோகன் காலத்தில் வடநாடும் தமிழ்நாடுதான் என்று எழுதக்காணோமே என்று கேட்கத்தோன்றும். தோன்றுவது இயற்கையே! ஆனால் தமிழக உண்மை வரலாற்றை அறிய விரும்புகிறவர்கள் கீழ்க்கண்ட கருத்தை மனதில் வைத்துக் கொள்ளவேண்டும். அதாவது:—தமிழகத்தில் வரலாற்றை பெரும்பாலும் பிற நாட்டார்கள்தான்—அதிலும் தமிழக மக்களை கேவலப்படுத்திக் கொண்டிருக்கிற—அடிமைபடுத்திக்கொண்டிருக்கிற கூட்டத்தார்கள்தான் எழுதியிருக்கிறார்கள் என்பதை மனதில் வைத்துக்கொள்ளவேண்டும்.

தமிழர்களில் ஒரு சில குலத்தார்களை ஏன்? எல்லோரையுமே சூத்திரர்கள் (தேவடியாள் மக்கள்) என்று பெயர் சூட்டி கேவலப்படுத்தி ஒதுக்குவதைப் போல தமிழுக்கே சிறப்பான ழ என்ற எழுத்தையும் ற என்ற எழுத்தையும் சூத்திர எழுத்துக்கள் என்று பெயர் சூட்டி ஒதுக்கி வைத்திருப்பதையும், இவ்விரண்டு எழுத்துக்களால் ஏற்பட்ட சொற்களை எழுதும்பொழுது, பேசும்பொழுது வேண்டிய அளவு புறக்கணிக்கப்படுவதையும்

உணர்ந்து—உணர விரும்புகிற ஒவ்வொருவரும், தான் இறக்கும்வரையாவது மனதில் வைத்துக்கொள்ள வேண்டும்.

இவ்விரு கருத்துக்களையாவது ஐயத்திற்கு இடமின்றி மனதில் வைத்துக்கொண்டு பார்த்தால், வரலாற்றுச் சுவடியில் அசோகன் காலத்தில் வடநாடும் தமிழ்நாடுதான் என்று எழுதாத காரணத்தையும் எளிதில் தெரிந்துக் கொள்ளலாம்.

இப்படி நமது அழிவுக்கு அன்று இருந்து இன்று வரை ஆரிய மொழியின் சேர்க்கைதான் காரணம் என்பது அறிஞர் கண்ட முடிவு.

25 ஆண்டுகளுக்கு முன் சென்னை அரசியலார் தமிழ் மொழியை ஆரிய மொழியுடன் உள்ளடக்கி வைத்து மதிப்புக் கொடுத்தார்கள். இப்போக்கை வன்மையாக கண்டித்து தமிழ் இனம் வேறு. சமஸ்கிருத மொழி வேறு. தமிழ், திராவிட இனம். சமஸ்கிருதம், ஆரிய இனம். ஆகையால் தமிழ் மொழியைக் கேவலமாக மதிப்பிடுவதை ஒழித்து, வடநாட்டு உயர் தனிச் செம்மொழி சமஸ்கிருதம் என கொண்டாற்போல தென்னாட்டு உயர் தனிச் செம்மொழி தமிழெனக் கொண்டு விதிகள் வகுத்தலே ஏற்புடைத்தாம் என்றும்; இவர்கள் தமக்கு என்றும் குன்றாப் பழியை விளைக்கத் தக்க செயலிற் புகாது புகழ் பயக்கற்பால நல்லாற்றிச் சென்று நம் தமிழ் மொழியும் உயர் தனிச் செம்மொழி என்றேகொண்டு ஆவன செய்யவேண்டுமாய் அரசியலாருடன் மன்றாடி இருக்கிறார் ஒரு தமிழ் அன்பர்.

தமிழகத்தில் — தமிழ் நெஞ்சில் — தமிழ்மொழியில் ஆரியச் சொற்களையும் எழுத்துக்களையும் புகுத்துவதினால் தமிழகம் குறைந்துக்கொண்டே வருகிறதென்பதைச் சுட்

டிக் காட்டுவதற்காக தனது ஆரியப் பெயரையும் "பரிதி மாற் கலைஞன்" என்று தனித் தமிழில் மாற்றி வைத்து வழிகாட்டிச் சென்றுள்ளார் அந்த அன்பர்.

அந்த அன்பர் பிறப்பில் ஆரியர். செய்கையில் பழந்தமிழர். ஆரிய இனமொழியால் தமிழகத்திற்கு கேடு என்பதை எதிர் குலத்தில் பிறந்தவரே நமக்கு இடித்துக் கூறி எடுத்துக் காட்டிய பின்பும் நம் அகத்தில் தேசிய மொழியாக நேரடியாகவும் மறைமுகமாகவும் வந்துக் கொண்டிருக்கிற ஆரிய இன மொழியைப்பற்றி, சிர்தூக்கி பார்க்க வேண்டாமா வட நோக்கித் தமிழர்கள்?

ஆங்கிலேயனை அதட்டி அனுப்பிய தமிழ் அன்பர்களே! அதோ சிவனடியார் சொல்லுவதைக் கேளுங்கள். தென்னாடு உடைய சிவனே போற்றி! எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி! என்கிறாரா? அல்லது பரந்த நோக்கமுள்ள சிவனடியார், சிவனுடைய இருப்பிடம் என்று சொல்லப்படுகிற இமயமலை வட நாட்டில் இருப்பதால் "வட நாடு உடைய சிவனே போற்றி! என்று தமிழகத்தை மறந்து சொல்லுகிறாரா? என்பதை சற்று உற்று கவனித்துப்பாருங்கள்.

சமயப் பெரியார் சாற்றுவது இருக்கட்டும் ஒரு புறம். முதலில் இந்தியன் என்று சொல்லவேண்டும் என்கிற தமிழர்களின் அன்புக்குரிய பாரதியார் இதோ! பாடுகிறார். கேளுங்கள். வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர் வாழிய பாரத மணித்திரு நாடு! என்கிறாரா? அல்லது வாழ்க இந்தியா என்று தொடங்கி இந்தியனை வாழ்த்தி, பின்னால் தமிழையும் தமிழனையும் வாழ்த்துகிறாரா? என்பதையாவது ஒரு நாள் ஒரு பொழுதாகிலும் சிந்தித்துப் பார்க்கக்கூடாதா? பாருங்கள். ஆர அமர ஆலோசித்துப் பாருங்கள்.

பாருங்கள், இனி கொஞ்சம் வடக்கு நோக்கிப் பாருங்கள். அங்குள்ள மொழிகளில் பெரும்பாலானவை ஆரி

யத்தின் கிளை மொழிகள். அப்படி இருந்தும் அங்குள்ள தாய் மொழிகளுக்கும் பொது மொழிக்கும் உள்ள போராட்டத்தைப் பாருங்கள்.

நமது தாய் மொழியாகிய தமிழும் வந்துகொண்டே இருக்கிற பொது மொழியின் இனமும் வேறு வேறானவை இது மாத்திரமலல தீங்கை விளைவித்துக் கொண்டிருப் பவை. இதை யெல்லாம் உணர்ந்திருப்பதினால் இந்தி மொழியை வேண்டாம். ஏன்? வேண்டவே வேண்டாம் என்கிறோம். ஆனால் வட நாட்டில் தாய் மொழியும் பொது மொழியும் ஒரே இன மாய் இருப்பதினால், அங்குள்ளவர்கள் இந்தியை வரவேற் கிறார்கள். வேண்டும் என்கிறார்கள். ஆனால் அந்த பொது மொழி எப்படி இருக்கவேண்டும் என்பதில் காந்தியடிகளின் வாக்கை மீறியும் மொழிப் போராட்டம் நடத்துகிறார்கள்.

இந்தியா வெங்கும் பொது மொழியை பரப்புகிற வர்களின் தலைவர் காந்தியடிகள். இவர் சொல்லைக்கேட்டு சிந்திக்காமல் அப்படியே பொது மொழியை பரப்புகிறார் கள் காங்கிரஸ் அன்பர்கள் இங்கே. ஆனால் காந்தியடிகள் பொதுவாக எதைப்பற்றி சொன்னாலும் சிந்திக்காமல் அப்படியே ஏற்கக் காணோம் அங்கே. ஏற்காமல் இருப் பது மாத்திரமல்ல காந்தியடிகளின் போக்கை வன்மை யாக கண்டித்து எதிர்க்கிறார்கள், புருசோத்த தாண் டான் போன்ற காங்கிரஸ் அன்பர்கள்.

மொழிப் போராட்டம் யாரிடம் யார் நடத்துகிறார் என் பதைப் பார்த்தீர்களா? பாருங்கள் மூக்கிலே கை வைத் துப் பாருங்கள். இனி இம் மொழிப் போராட்டம் ஏன்? எப்படி நடக்கிறது என்பதை உற்றுப் பாருங்கள்.

கொஞ்ச காலத்திற்கு முன் பொது மொழி இந்தி என்றார்கள் இப்பொழுது இந்துஸ்தானி என்கிறார்கள். இந்த மாற்றத்திற்கு காரணம் என்ன, பொருள் என்ன?

இந்தியிலே முழுமையும் ஆரியச் சொற்களாய் இருந்தது —இருக்கிறது. இதை வெறுத்தார்கள் அங்குள்ள பலர். இந்தி தன் தாயகமாகிய ஐக்கிய மாகாணத்தைவிட்டு மற்ற தேசிய இன தாயகத்திற்கும் பொது மொழியாய் வருவதானல் எங்கள் மொழிச் சொற்களும் அந்த இந்தி பொது மொழியிலும் இருக்கவேண்டும். இது நியாயமான கோரிக்கை. இந்த நியாயமான கோரிக்கையை நிராகரித்துவிட்டு முழுமையும் ஆரியச் சொற்களாய் கொண்ட இந்தியை, பொதுமொழியாய் புகுத்து வது சத்தியத்திற்காகப் பாடுபடுகிறவர்களுக்கு தகாது என்றும்; மக்களை அன்பால் ஈர்க்கப்பட்டிருக்கிறோம். ஆகவே எண்ணியதை எண்ணியபடி செய்துவிட லாம் என்ற போக்கோடு எங்கள் வேண்டுகோளை புறக்கணித்து இந்தியை வெற்றிகரமாக ஆக்கிவிடுவீர் களானல், எங்கள் பிற்கால சந்ததியார்கள் மகாத்மாவாகிய உங்களைப்பழிப்பார்கள் என்பது திண்ணம்; என்றெல்லாம் கடுமையாக போராடினர்கள், இந்தியை வெறுத்த வட நாட்டு அன்பர்கள்.

• இந்த போராட்டத்தின் பயனல் ஆரிய பண்பாடு கொண்ட இனமொழியோடு மற்றும் ஒரு இனமொழி உண்டு. என்பதையும்: அதற்கு உருது முதன்மை என் பதையும் காந்தியடிகள் உணர்ந்தார்கள். உணர்ந்துக் கொண்டது மாத்திரமல்ல, இந்தியைப் பரப்பும் கழகத்தா ருடன் மாறுபட்ட கருத்துடையவர்களானர்கள்.

இம் மாறுபாட்டுக்கு பின், பொது மொழியில் ஆரி யச் சொற்களைக்குறைத்து, மற்றொரு பண்பாடுகொண்ட இன மொழியாகிய உருதுச் சொற்களையும் - வேண்டு மாலுல் எழுத்துக்களையும் பொது மொழியில் சேர்க்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் பொது மொழியை இந்தி என்று சொல்லவே கூடாது என்று வற்புறுத்தினர்கள். இன்றும் வற்புறுத்தி வருகிறார்கள்.

இதற்காக காகா காலேல்கார் என்ற மொழி வல்லு நரைத் தலைவராகக்கொண்டு கடமை ஆற்றிவருகிறர்கள். இப்படிக் கடமை ஆற்றிவர—வர இந்தி, இந்துஸ்தானி யாக மாறிவிட்டது.

மாறிவிடவே இந்தியை எதிர்த்தவர்கள் எதிர்ப்பை நிறுத்திவிருர்கள். தனி இந்தியை விரும்புகிறவர்கள் இப் பொழுது காந்தியடிகளை எதிர்க்கிருர்கள்.

இந்துஸ்தானியை எதிர்க்கிற வடநாட்டு ஆரியர்க ளிடம் கீழ்க்கண்டவாறு காந்தியடிகள் மறுமொழி கொடுத்து வந்தார்:—

இந்தி மொழி மத இயல்பும், பண்பாட்டு இயல்பும் உடையதாய் இருக்கிறது. மொத்தமாக பார்க்கும் பொழுது இந்த இயல்புகளோடு தொடர்பு வைத்துக் கொள்ள முகம்மதியர்கள் (பிற இனத்தார்கள்) விரும்ப மாட்டார்கள். எனவே பொது மொழிக்கு இந்தி என்ற பெயர் பொருந்தவே பொருந்தாது. இந்துஸ்தானி என்ற சொல்தான் பொருத்தமாக இருக்கிறது என்றும்.

பொது மொழி பரப்புகிற கழகத்திற்கு இந்துஸ்தானி சாஹித்ய பரிஷத் என்று அழையாமல் பாரதிய சாஹித்ய பரிஷத் என்று அழைப்பதன் நோக்கம் எனக்கு விளங்க வில்லை. "பரத்" என்ற சொல்லுக்கு ஏதாவது பொருள் இருக்குமாயின் ஆரிய இந்தியா என்றே பொருள் படும்.

இச் செய்கை பொது மொழியில் சேர்க்க வேண்டியதை புறக் கணித்து ஒதுக்குகிற மனப்பாங்கையும் பிற்போக்கான தன்மை யையும் இது காட்டவில்லையா? மேலும் எங்களுக்கு வரு கிற சுற்றறிக்கைகளை கவனிக்கும்பொழுது கலப்பற்ற சமஸ் கிருத சொற்களையே எடுத்தாளுகிறர்கள். "நிச்சே லிக்கே ஹுயே" என்று எழுதுவதற்கு பதிலாக "நிமன் லிக்

ஜெக்" போன்ற சமஸ்கிருத சொற்களேயே எடுத்தாளுகிருர்கள். தேவநாகரி எழுத்தை நன்கு அறிந்துகொள்ள, எனக்கு இப்படி எழுதுவதன் பொருள் யாதென விளங்கவில்லே.

அராபிய மொழியை அயல்மொழி எனச் சொல்லி ஒதுக்குவோமேயாளுல் சமஸ்கிருதத்தையும் ஒதுக்கவேண்டியே ஏற்படும். ஏனெனில் சமஸ்கிருத மொழி எப்பொழுதுமே இந்தியாவில் பேச்சு வழக்கில் இருந்ததில்லே.

இதை எல்லோருமே அறிவர். நான் சொல்லித்தான் தெரியவேண்டும் என்பதில்லே. இந்தி மொழியை பரப்ப விரும்புகிறவர்கள் உயிருள்ள பேச்சு வழக்கிலுள்ள மொழியை பரப்ப முயலாது, இந்திய வார்வை ஆரியமயமாக்குவதிலேயே நேரடியாக முனைந்திருக்கிருர்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. இந்துக்கள் தங்களுக்குள்ளேயே சீர்திருத்தம் செய்துக்கொள்வதைப் பற்றியோ அல்லது எதிர் மாருன காரியங்களில் ஈடுபடுவதைப் பற்றியோ முகம்மதியர்கள் (பிற இனத்தார்கள்) கவலே கொள்ளவில்லே. ஆளுல் பொது மொழி பற்றியதில் மொழி சம்பந்தமான காரியங்களேத் தவிர வேறு இயக்கங்களுக்கு கண்டிப்பாக இடம் கொடுத்தல் கூடாது. பொதுக்குடி (ஜன) நேர்மை என்பது இப்படிப்பட்ட போக்கை எதிர்க்கும்படி தூண்டுகிறது.

ஒரு வகை எழுத்தையோ அல்லது ஒரு சார்பான இந்தியை மட்டுமோ பலவந்தமாக எந்த மாகாணத்திலும் அல்லது எந்த மாவட்டத்திலும் எந்த மக்கட் கூட்டத்தின் இடையேயும் புகுத்த முயல்வது நாட்டு நலனுக்கு பெருந்த குந்தகம் விளேப்பதாகும்.

எனவே பொது மொழியில் சமஸ்கிருத சொற்களுக்கு அதிக சலுகை காட்டக்கூடாது. நடைமுறையில்

இயல்பாகவே பேச்சு வழக்கில் உள்ள சமஸ்கிருத-இந்தி-உருது சொற்களுக்கே சலுகை காட்ட வேண்டும்.

இதற்கு மாறுன நிலையில் தனி இந்தியை பொது மொழியாய்ப் பரப்பும் பணியில் பிறதேசிய இனத்தார்களின் ஒத்துழைப்பைக்கேட்பது, அவர்களை தற்கொலை செய்துக்கொள்ள வேண்டுமெனக் கேட்பதையே ஒக்கும்.

பல வகையிலும் எடுத்துக்கூறிய பின்னும் பொது மொழி தனி இந்தியாய் இருக்க வேண்டும் என்று எதிர்த்து வருகிறுர்கள் வடநாட்டு ஆரியர்கள்.

இப்படிப்பட்ட கருத்துக்கொண்ட நீண்ட கடிதங்கள் மூலம் காந்தியடிகள் தனி இந்தியை விரும்பும் தலைவர்களுக்கு இடித்துக் கூறி வந்திருக்கிறுர்.

இந்த எதிர்ப்பை பொருட்படுத்தாமல் காந்தியடிகள் பொது மொழியைப் பொதுவாக்கி வந்தார்கள். ஆனுல், இதே காந்தியடிகள் பொது மொழியில் கவனிக்காமல் விட்டுப்போன கருத்தை எடுத்துக் காட்டினவர்களுக்கு செவி சாய்த்தார்கள். உண்மையை அறிந்தார்கள். பொது மொழியை பொதுவாக்கினுர்கள். அதே நேரத்தில் இந்தியாவின் தாய் மொழியாக உருவாகி வருகிற இந்துஸ்தானி மொழியில் இந்தியாவுக்குப் புறம்பான ஆங்கிலம் போன்ற பிறமொழிச் சொற்களையோ, எழுத்துக்களையோ புகுத்தவிடாமல் தனிமை ஆக்கி வருகிறுர்கள்.

இம்மாதிரி வடநாட்டில் மறைவாக மிக விரைவாக நடந்து வருகிறது மாபெரும் மொழிப் போராட்டம்.

இந்த மொழிப் போராட்டத்தில் திராவிடக் கழகத்தார்களும்; தமிழர் கழகத்தார்களும் ஒதுங்கி இருப்பது சரி. ஆனுல், அசோக சக்கரத்தோடு கூடிய மூநிறக் கொடியின்கீழ் மற்ற தேசிய இனங்களுடன் நாம் கலந்திருக்க வேண்டும் என்பவர்கள்

இந்த பொது மொழிப் போராட்டத்தில் தீவிரமாய் கலந்து, இந்தியாவின் பொது மொழியில் தமது உரிமையைப்பெற வேண்டும்.

இப்பொழுது காந்தியடிகள் பொது மொழி எது? எப்படிப்பட்டது? என்பதை விளக்கும்பொழுது, விந்திய மலைக்கு வடக்கே உள்ளவர்களில் பெரும்பாலோர் பேசி, எழுதி வருகிற இந்தி - உருது கலந்ததொரு மொழியே வருங்கால இந்தியாவின் பொதுமொழி என்றும்; இதன் பெயர் " இந்துஸ்தானி " என்றும் சொன்னார்கள்.

இந்த கருத்தை உற்று நோக்கின் இந்தியா என்ற நாடு விந்திய மலைக்கு வடபகுதியில் உள்ளதா? தென் பகுதி இந்தியாவுடன் சேராதா? சேராது என்றால் இந்தியாவின் பொது மொழியை இங்கு ஏன் பரப்பவேண்டும்? தென் பகுதியும் இந்தியாவுடன் சேர்ந்தது என்றால் வருங்கால பொது மொழியை வட இந்தியாவிலுள்ள இரண்டு இன மொழிகளின் சொற்களால் மாத்திரம் உருவாக்குவானேன்.

தென் பகுதிக்கு திராவிட இனமொழி முதன்மை அல்லவா! இந்த இன மொழியிலிருந்தும் நூற்றுக்கு முப்பது சொற்களாவது பொது மொழியில் சேர்க்காவிட்டால் இந்துஸ்தானி மொழியை, வட பகுதிக்கு மாத்திரம் பொது மொழியாகுமே ஒழிய தென் பகுதிக்கும் பொது மொழி என்று எப்படிச் சொல்லமுடியும்? வட நாட்டு மொழியை தென்னாட்டிற்கு பொது மொழியாய் வைப்பதற்கு சம்மதித்தால் நம்மை நாம் தற்கொலை செய்வதற்கு ஒப்பாகாதா? வடநாட்டு மொழிக்கு நாம் அடிமை அல்லவா?

ஒரு சார்பான பொது மொழியை நம் நாட்டில் புகுத்தப்படுவதை எதிர்க்கும்படி நமது மனசாட்சி தூண்டவில்லையா?

பஞ்சாபி, சிந்தி, உருது போன்றவை அராபிய இன மொழிக்கு உட்பட்டிருப்பதைப் போல வங்காளி, ஒரியா, குஜராத்தி, மராட்டி, இந்தி போன்றவை ஆரியமொழிக்கு உட்பட்டிருப்பதைப் போல நமது தமிழ் மொழி அராபிய இன மொழிக்காவது ஆரிய இன மொழிக்காவது—வேறு எந்த இன மொழிக்காவது உட்பட்டது என்று யாராலும் சொல்ல முடியுமா? முடியவே முடியாது.

எந்த இன மொழிக்கும் குறிப்பாக ஆரிய இன மொழிக்கும் தமிழ் மொழி உட்பட்டதல்ல என்பதையும் தனிப் பெரும் செம்மொழி என்பதையும் நாம் சொல்ல வேண்டாம். பன்மொழி வல்லுநராகிய ஆங்கில துரை மகனார் திரு. கால்டுவெல் சொல்லுவார், தான் எழுதிய நூலின் மூலம். அவர் ஏன்? ஆரியமகனாய்ப் பிறந்து உண்மைத் தமிழனாக செயலாற்றிச் சென்ற உயர் திருவாளர் பரிதிமாற் கலைஞன் அறைந்து சொல்லுவார். சொல்லி இருக்கிறார் உள்ளத் துடிப்போடு.

மேலும், இந்த திராவிட இன மொழி மற்ற இன மொழிகளைப் போல மத்திய ஆசியாவில் இருந்தோ—மத்திய தரைக் கடல் ஓரத்திலிருந்தோ வந்து உரிமைகேட்க வில்லை. இந்த நாட்டுக்கே உரித்தானது. இதுவும் வெளி நாட்டில் இருந்து வந்தது என்று சொன்னாலும் கூட அராபிய இனத்திற்கும் ஆரிய இனத்திற்கும் முந்தி வந்தது என்பார்களே ஒழிய பிந்தி வந்தது என்று சொல்வாரில்லை.

எனவே, நமது தமிழ் மொழி தனி இனம். இந்த நாட்டுக்கே உரிமை இனம். இப்படி இந்த மொழி இருக்க, பின்னால் வந்த மொழியிடம் வாழ உரிமை கேட்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். என் செய்வது? அன்று இருந்து இன்றுவரை உருப்படியான முறையில் திட்டம் வகுத்து கடமை செய்துவரக் காணோமே! வாழ்ந்தோம் ஒரு காலத்தில் இமயம் வரை என்று, இன்று சொல்லி என்ன பயன்? விழ்ந்துள்ளோம் இந்தகாலத்தில் தென் கிழ் மூலையில் என்பதை எண்ணி என்ன பயன்?

வாழ்ந்தோம் ஒரு காலத்தில் என்பதையும், வீழ்ந்துள்ளோம் இக்காலத்தில் என்பதையும் இனி நாம் கொஞ்சம் மறந்து விட்டு வகையுடன் வாழ வேண்டும் எதிர்காலத்தில் என்பதை முன்னால் வைத்து, உரிமை பெற்று—பெருமை பெற்று தலை நிமிர்ந்து உலகத்தில் வாழ, அனைவரும் ஒன்றாய் ஆவன செய்யவேண்டும் அதிவிரைவில் செய்தால், சிறப்பு அடைவோமே ஒழிய, சென்ற கால பெருமையை மாத்திரம் ஜெபித்துக்கொண்டிருந்தால் சிறப்படைய மாட்டோம் என்பது திண்ணம்.

எனவே உரிமை வேண்டும், பொது மொழியில் தமிழுக்காக உரிமை வேண்டும். தென்னாடும் இந்தியாவுடன் சேர்ந்திருப்பதினால் உரிமை வேண்டும். தென்மொழி நிலத்தில் இந்துஸ்தானியை புகுத்துவதினால் உரிமை வேண்டும். வேண்டும், வேண்டும் இவ்வுரிமை விரைவாக வேண்டும்.

### வேண்டுவது எப்படி ?

நமது மாண்ட வழிச் செலவுக்கு வரலாற்றிற்கு அசோக சக்கரத்தை தேசிய மூநிறக் கொடியில் வைத்திருக்கிறார்கள். அதே அசோகக் காலத்திற்கு செல்ல வேண்டும், இப்பொழுது நாம்? ஏனெனில், நமது தமிழ் மொழி வட நாட்டில் உள்ள எந்த மொழியுடனும் தொடர்பில்லை. ஆனால், அசோகன் காலத்தில் உள்ள பிராமி மொழியும் தமிழ் மொழியும் ஒன்றாகவே இருக்கிறது. தாம்பிரவர்ணியும் பொருனை ஆறும் வேறாகவும் ஒன்றாகவும் இருப்பதுபோல; தமிழும் திராவிடமும் ஒன்றாகவும் வேறாகவும் இருப்பதுபோல; முருகரும் சுப்பிரமணியரும் ஒன்றாகவும் வேறாகவும் இருப்பதுபோல தமிழும் பிராமியும் ஒன்றாகவும் வேறாகவும் இருக்கிறது.

ஆகவே எந்த எழுத்துக்களும் சொற்களும் தமிழுக்கு சிறப்பாகவும்—உயிராகவும்—உரிமையாகவும் இருக்கிறதோ அந்த எழுத்துக்களும் சொற்களும் வருங்கால பொது மொழியில் இருக்கும்படி ஆக்க வேண்டும். அதுதான் ற, ழ. என்ற எழுத்துக்கள். இந்த இரண்டு எழுத்துக்களும் அசோகன் காலத்தில் உள்ள (பிராமி - தமிழ்) மொழியில்

இருக்கின்றன. ஆகையால், இந்த இரு எழுத்துக்களை, தமிழ் எழுத்துக்கள் என்ற முறையில் எடுத்துக்கொண்டாலும் சரி, அசோகன் காலத்தில் உள்ள எழுத்துக்கள் என்ற முறையில் எடுத்துக்கொண்டாலும் சரி, வருங்கால பொது மொழியில் தென் நாட்டில் பரவுகிற பரப்புகிற பொது மொழியில் கண்டிப்பாய் இருக்கும்படி ஆவன செய்ய வேண்டும், காங்கிரஸ் அன்பர்கள். இதுதான் நமது குறிக்கோள்.

*'ழ' வுக்கும், 'ற' வுக்கும் இந்துஸ்தானியில் எப்படி வரிவடிவம் ஆக்க முடியும்? என்று மலைக்கவேண்டாம். இதோ இருக்கிறது பாருங்கள் :—*

ழ ▲ ழா ▲ ழி ▲ ழீ ▲ ழு ▲ ழூ
ழ்ழு ▲ ழெ ▲ ழை ▲ ழொ ▲ ழௌ ▲ ழம் ▲ ழஃ
ற ▲ றா ▲ றி ▲ றீ ▲ று ▲ றூ ▲ ற்ரு
றெ ▲ றை ▲ றொ ▲ றௌ ▲ றம் ▲ றஃ

எரல்.அ.மலையப்பன்

*இந்த மாதிரி வரிவடிவம இந்துஸ்தானி நெடுங்கணக்கில் சேர்த்து,* இவ்வெழுத்துக்களால் கொண்ட சொற்கள் நூற்றுக்கு முப்பதாவது ஒவ்வொரு இந்துஸ்தானி சுவடியிலும் இருக்கும்படி ஆக்க வேண்டும். *இப்படிப்பட்ட பாடச்சுவடி காசுமீர் பக்கத்திலும் இருக்கவேண்டும். இப்படி எங்கும் இருக்கவேண்டும்.* பொது மொழி மூலம் வடமொழிச் சொற்களை தென்னாட்டில்புகுத்துவதைப்போல், அதே பொது மொழி மூலம் தென் மொழிச் சொற்களை வடநாட்டில் புகுத்தப்படவேண்டும்.

---

மேலே உள்ள பிளாக்கில் "ரு" என்பதை "ற்று" என்று படித்துக்கொள்ளவும்.

இப்படிச் சேர்க்கப்பட்டால்தான் நமது தமிழ் மொழி தனி என்றாகும். இல்லாவிட்டால் மிக விரைவில் வடமொழிக்கு உட்பட்டே போகும். இது திண்ணம். முக்காலும் திண்ணம். இப்படிச் சேர்க்கப்பட்டால்தான் ழ'வுக்கும் ற'வுக்கும் ஆட்டப்பட்ட ஆத்திரப் பட்டம் ஒழியும்.

இப்படிச் சேர்க்கப்பட்டால்தான் ழ'வுக்கு ள என்றும், ல என்றும் ற'வுக்கு ர என்றும் இப்பொழுது பிழைபட்டு எழுதிவரும் நிலை ஒழியும்.

இப்படிப்பட்ட மூலாதாரமான கிளர்ச்சியின் மூலமாகத்தான், இந்த நாட்டிலே ஆரிய—அராபிய இனமொழியோடு திராவிட இனமொழி ஒன்று இருக்கிறது என்பதை அறிஞர் அனைவரும் உலகத்திற்கு அறிவுறுத்த முடியும். இதனால் என்ன? அதனால் என்ன? என்று சொல்லிக்கொண்டு இனிமேலும் இப்படியே இருப்போமேயானால் தமிழும், தமிழகமும் நாட்டில் இருக்காது. ஏட்டில்தான் இருக்கும்.

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினும் முந்து. (613)

என்ற குறளையும் இணைத்துப் பாருங்கள்.

ஆகையால் புலிக்கொடியை ஏந்தி நிற்கும் தமிழர்கள்—இப்பகுதியில் இந்துஸ்தானியை பரப்பும் தமிழன்பர்கள், இரு பரிதிமாற்கலைஞன் என்ற தமிழன்பரைப் போல, தமிழ்மொழி தனி இனம் என்பதை எடுத்துக் காட்ட வருங்கால பொது மொழியில் மேற்கண்டவாறு ஆக்க உரிமை பெற ஆவன செய்யவேண்டும்.

இந்த உரிமையைப்பெறாமல் இந்துஸ்தானியை பொது மொழியாக ஏற்பது நம்மை நாமே தற்கொலை செய்துகொள்ளுவதற்கு ஒப்பாகும் என்பது மாத்திரமல்ல. எதிர்கால நமது சந்ததியார்களுக்கு துரோகம் செய்தவர்களாவோம். அந்த சந்ததியார்களால் பழிக்கப்பட்டவர்களாவோம் என்பது திண்ணம். திண்ணம் திண்ணம்.

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று. (967)

இளிவரின் வாழாத மானமுடையார்
ஒளிதொழு தேத்து முலகு. (970)

---